உ

சிவமயம்



பாண்டிவள நாட்டில் இராமநாதபுரம் மாவட்டத்தில் சமிவனச் க்ஷேத்திர மென்னும் கோவிலூரின்கண் மகோன்னதமாய் விளங்கும்

ஸ்ரீலஸ்ரீ

முத்திராமலிங்க ஞான தேசிக சுவாமிகள்
அவர்கள்
ஆதீன மடாலயத்தில்

எட்டாவது குருமூர்த்திகளாக
எழுந்தருளியிருக்கும்



ஸ்ரீலஸ்ரீ

சோம சுந்தர ஞான தேசிக சுவாமி
அவர்களது

முதலாவது ஆண்டு

# குருபூசை நினைவு மலர்

இது காரைக்குடி
நா.க.லெ. இராமசாமி செட்டியார் அவர்களால்
வெளியிடப்பட்டது.

கலியுகாதிஸு- 5072
விரோதிகிருது-ஸு மாசி-மீ 22 உ

5-3-1972

சிவமயம்

**மதுரை ஸ்ரீ குட்டைய சுவாமிகள் மடத்திலிருக்கும்**
**ஸ்ரீ சங்கர சுவாமி அவர்களால் பாடப்பெற்றது**

*நாற்பத்தெண் சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்*

சீர்கொண்ட கலிவருட மையா யிரத்திறெடு
சேருமெழு பத்திரண்டில்
திகழ்கின்ற பாண்டிவள நாட்டில் விளங்கிடும்
செகமகிழ் சமிவனத்தில்
திருமிகு சோவிலூர் வேதாந்த மடமதிற்
றிகழுமெட் டாந்தலைவராய்ச்
சேர்சோம சுந்தரத் திருநாம முற்றுலகிற்
றிவ்யகுண சீலராகி
செனனநோய் தீர்ந்திட அதிபக்தி கொண்டுதான்
சிவபதம் வணங்கி நித்தம்
செல்வமுறு சாதனம் நான்குமெ நிறைந்திடும்
தேசுடை மாணவர்க்குச்
சிரவண மனனுதி நாடொறும் செய்வித்து
செகமதிற் றினகரன்போற்
சிறப்புறத் திகழுறும் தேசிக மூர்த்தியாய்ச்
சீர்பெற நின்றதீரன்,
கார்கொண்ட மேகமென சிவநாம வசனமதைக்
கனிவுறப் பொழியும் வெள்ளம்
கயிலையி லெழுந்தருள் பரமனை நினைந்துமே
கசிந்துருகு கருணைவாரி
கனவிலும் வேறுநினை வின்றியே யனுதினங்
கடவுளைக் கருதுசோதி
காண்பரும் யதிகளில் உத்தம துறவியாய்க்
கண்கண்ட விரதயோகி
கதித்திடும் செல்வமதைத் துச்சமா யெண்ணியே
கானலின் அம்புபோலக்
கருதிடும் மனமதி லிருவகைச் சார்பையும்
கடையெனத் தள்ளிநின்றோன்
கருமநற் கிரியையில் மனமது தோய்ந்துதான்
கண்ணியம் மிகவு முடையோன்

காசிமுதற் க்ஷேத்திரம் மூர்த்திதல தீர்த்தங்கள்
கண்டுதான் குளிருமுள்ளன்,
தேர்கொண்ட மனமதிற் சிருங்ககிரி தனில்மேவு
தேசிகப் பீடமதனில்
தெளிவுறச் சென்றுதான் விருப்பமொடு வேதாந்த
செகவித்யா தீர்த்த குருவைத்
திரமாக வெண்ணியே அவர்பத்ம பாதமதைச்
சென்னிமிசை சூடுபெரியோன்
சேதன சுகவடிவு மானதன் சொருபமதிற்
றிரமாக நிற்குமுரவோன்
செறிவான இந்திரிய கரணமதை வென்றுதான்
செகமதில் விளங்குதீரன்
சென்மாந் தரஞ்செய்த பவவினைகள் யாவையும்
சிதறவே வென்ற சூரன்
சித்தமதில் மறவாது சிவயோக மதுபுரி
திவ்யகுண சாதுபோதன்
செகசீவ பரமதை யணுதின முசாவிடும்
தீரபர வீரனுனேன்,
பேர்கொண்டு மிளிருசுக தவயோக மேவுமிப்
பெரியோர் கிடைத்தலரிதே
பிஞ்ஞகனை மறவாது சிந்தனை தினம்புரி
பெட்பினர்க் கருளுமிவர்தான்
பேசிடும் விரோதிகிரு தெனும்வருட மதனிலே
பெருமைமிகு கும்ப மதியில்
பிறங்கிருப திருநாளில் சுவாதியா முடுவதில்
பெத்தமற வருகின்றதோர்
பேரொளி கொண்டிலகு ஆதித்த வாரமாம்
பெரும்புகழ் கொண்ட நாளில்
பேதமறு தனவணிகர் யதிகளாம் சாதுக்கள்
பெரும்சிறப் பாகவேதான்
பிரியமுறும் அண்ணு மலையெனும் தேசிகர்
பேரொளிக் கிருபையாலே
பெரும்புகழ்ச் சிறப்பொடும் பிரதம குருபூஜைப்
பெருமடல் மலர்ந்த தன்றே.

சிவமயம்

## குடியேற்றம் ஸ்ரீ தக்ஷிண மூர்த்தி சுவாமிகள் மடத்திலிருக்கும்

## வரகவி ஸ்ரீசோம. சொரூபானந்த சுவாமி அவர்களால் பாடப்பெற்றது.

### ஸ்ரீ குருபரக் கண்ணி

*காப்பு*

குருபரக் கண்ணி குருபரர்க் கருள
ஒருதிருக் குஞ்சரமே காப்பு.

இருக்காதி தேருத என்னுருவாம் ஆன்மாவைச்
சுருக்காகச் சொல்சோம சுந்தரனுங் குருபரனே. 1

துரியநிலை யதனிலுறுந் தூயசுக ஆன்மாவில்
திரிபதற நிலைத்திடென தீரமருள் குருபரனே. 2

விளக்கிருக்கத் தீதேடும் வீணலச்சல் விட்டிடென
உளக்கருத்தி லுணர்ந்திடவே உண்மைதரு குருபரனே. 3

பொருளற்ருர்ப் பூரிப்பர் அருளற்ருர் அற்றறெனும்
பொருளுரைத்து நாயேனைப் பூரித்த குருபரனே. 4

கேட்டலொடு சிந்தித்தல் கேடறவே தெளிதலென
தேட்டமற நிட்டைதனை தேக்கிடென்ற குருபரனே. 5

எல்லாம் வருமுனக்கு ஏதமில்லையென் றுரைத்த
சொல்லா லருள்சோம சுந்தரனுங் குருபரனே. 6

குன்றக்குடி குமரனிடங் குறையாத பத்தியினல்
அன்றலர்ந்த பவளமல்லி அர்ச்சித்த குருபரனே. 7

போரூர்வாழ் முருகனடி போற்றியே பன்னுளும்
போரூர்சந் நிதிமுறையும் போற்றிவந்த குருபரனே. 8

பூதியணி மேனியுடன் புகழ்சற்று மெண்ணுமல்
ஞாதியராம் பழவடியார் ஞானமணிக் குருபரனே. 9

ஏம்பல்நகர் முத்துராமன் இல்லையே பிள்ளையென
சாம்பசிவன் றன்னருளால் சனிப்பித்த குருபரனே. 10

விருப்புடனே எறும்பூர்வாழ் வேளாளர் மழைவேண்ட
திருப்புன்கூர் பதிகத்தால் தெண்ணீர்செய் குருபரனே. 11
சிருங்ககிரி சங்கரனுஞ் சேர்சச்சி தானந்தர்
ஒருங்குரைத்த மறைப்பாடல் உண்மைசெய்த குருபரனே 12
வடலூர்க்குத் தான்சென்று வள்ளலார் வகுத்தவொளி
உடலூரில் சொல்சோம சுந்தரனுங் குருபரனே. 13
மும்மூர்த்தி வாக்கென்னு மூவர்மொழி கீதையினை
அம்மூர்த்தி தனையொப்ப அருள்செய்த குருபரனே. 14
சந்நியாசி யானபின்னுஞ் சாதிகுல வாசிரமம்
உன்னுவரேல் உய்யுநெறி யுண்டாகுமோ குருபரனே. 15
செருக்குற்றூர் கல்வியென சிதைவுற்ற சித்தத்தில்
நெருக்குற்ற ஆன்மாவை நேசியார் குருபரனே. 16
காசிகா னந்தர்முதல் கனபாடிகள் பணிந்தால்
காசினியோர் உன்பெருமையை காணுவரோ குருபரனே. 17
மன்னுராம லிங்கமென்றும் மருவுமுத்து ஐயனென்றும்
உன்னுடைய சீடர்களில் உயர்நால்வர் குருபரனே. 18
அன்னவரில் நாயேனும் ஆன்றமைந்த கோபாலும்
இன்னும் பலருண்டென்று இயம்புவர்கள் குருபரனே. 19
நடையருப் பெருந்துறவும் நாவினிடை ஐந்தெழுத்தும்
இடையருத் தியானம்செய் இயல்புடைய குருபரனே. 20
கழுத்திலக்க மணிமாலை கையினிலோர் ஜபமாலை
விழுப்பமாய் விதேகம்வரை விடாதிருந்த குருபரனே. 21
திருக்குளத்துத் தீர்த்தமதுந் தீப்பிறப்பும் சேர்த்தருந்தி
குருப்பிரான் பதமுன்னி கும்பகஞ்சேர் குருபரனே. 22
இடைக்காட்டுச் சித்தனுக்கா இருந்தவிடந் தனைநீத்த
சடைக்காட்டுப் பித்தனடி சார்ந்திருக்குங் குருபரனே. 23
கலிஐயா யிரத்திஞெடு கலந்தஎழு பத்தொன்றில்
மலிசாதா ரணவாண்டில் மாசிமதி குருபரனே. 24
சோதியுடு சஷ்டிதிதி செய்வாரம் தேதியுநால்
சோதியுரு வானசோம சுந்தரனுங் குருபரனே. 25

குருபர னருளால் குருபரக் கண்ணி
வருபவ நீங்க வகுத்தேன் – வருபுலவீர்
ஒருதரம் ஓத உத்தம வீடாம்
இருதரம் ஓதுவ தேன்

உ
சிவமயம்

காரைக்குடி ஸ்ரீ கோவிலூர் மடத்திலிருக்கும்

சோம. கோபால சுவாமி அவர்களால்
பாடப்பெற்றது.



# ஸ்ரீ குரு ஸ்துதி

## ஸ்ரீ கணபதி வணக்கம்

முத்திராம வீசன் முழுதருள் பெற்றெனக்கு
முத்திபெற் றுய்யு முயல்வினைச்-சத்தியமாய்
உன்னியுரை செய்த உயர்குருவைப் பாடற்கு
வன்னியைங் கையனே வா.

*எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்*

மலர்மிசைவை குமயன்மே திவினி னைகள்
மன்னியகா மியநிட்கா மியமென் றிரண்டாம்
பலர்முன்ன தியற்றிப்பல் வகைத்துன் புறுவார்
பக்குவர்பின் னதியற்றிப் பெறுவா ரின்பம்
மலர்மிசைவண் டென்னவந்தோர்! பின்ன தியற்றி
மருவுகுரு சீடனாகிப் பொருந்தி வாழ
பலர்புகழ் கோவிலூர் மடத்தி லெட்டாம்
பட்டமுறு சோமசுந்த ரனுமெங் குருவே- 1

உலகிலுள ஜீவர்க ளின்பெய் தற்காம்
உத்திகளை யனேகமியற் றுவரா னலும்
அலகிலா னந்தம்பெற் றுய்தற் கீசன்
அடிகளைநிட் காமியமாய்ப் பத்தி செய்ய
கலகமிலா நான்மறைமுன் னேது மென்றுங்
கச்சிதமா யிங்குரைத்தா ளாக்கி முத்தி
உலகமுறு நெறிகாட்டிச் சென்ற கோவே!
உயர்வான சோமசுந்த ரனுமெங் குருவே, 2

வரமான குருசேவை காத்தி ரத்தில்
வக்கணைக ளொன்றுமில்லாத் தன்மை முத்தின்
உரமான விச்சையிம் மூன்றும் போதும்
உறுதியாம் வீடடைதற் கென்று சொன்ன
பரமான சங்கரர்தம் மொழியிங் கோதிப்
பக்குவர்க்கு வருணமெலா மொன்றும் வேண்டாம்
திரமான யுரையாமென் றெடுத்துக் காட்டித்
திடமளித்த சோமசுந்த ரனுமெங் குருவே. 3

கேட்டல்சிந் தித்ததெளி தலெனு மிவையால்
கேடுறுமஞ் ஞானமையந் திரிவு மூன்றும்
வீட்டலா மதனுல்நல் ஞானந் தோன்றும்
வீடுபேரு மிதுபெற்றேன் ஜீவன் முத்தன்
கூட்டல்செய் மனையாதி கொண்டோன் பெத்தன்
கூறுனுத் துன்பமவ னுக்கே யுண்டு
நாட்டல்செய் முன்புரைத்த தென்று சொன்ன
நல்லாசான் சோமசுந்த ரனுமெங் குருவே. 14

தத்துவங்கள் முப்பத்தா றென்ப ரவையில்
தனிப்பிரம மதுநீயே யாவா யென்று
நித்தியநா னறிதற்கென் றெடுத்து ரைத்து
நினைவுபடுத் தியவருளை யென்ன சொல்வேன்
சுத்தியுஞ்சூழ் வயல்கொண்டுந் தேனு ரோடிச்
சுகமளிக்கும் பேறுகொண்ட விந்நி லத்தை
மெத்தியதாங் கோவிலூரென் றுரைப்ப ரதனில்
மேவியுறு சோமசுந்த ரனுமெங் குருவே. 5

இவ்வுலகின் ஞானசாத னங்க லெட்டாம்
இவையிலொன்றே விடயவெருப் பாகு மதனுல்
மூவ்வுலகின் விருப்பத்தை விடுத்து மேலாம்
முத்தியடை தற்கிதுவா மென்றே வாழ்ந்தீர்
தவ்வுமன மொடுக்கவிவி திசாசந் யாசந்
தந்தீர்சென் றுண்டெனக்கும் பதினைந் துதையில்
மூவ்வாசை யையொழிக்கும் கோவி லூர்வாழ்
முன்னவனே சோமசுந்த ரனுமெங் குருவே. 6

 

ஞானம்பெற் றுய்தற்குப் பஞ்ச கோச
ஞானவிசா ரம்வேண்டு மன்றி வேருய்க்
கானம்செய் தற்கொன்றில் லென்று ரைத்துக்
காட்டினீர் சசிவன்ன னுக்கு மேலாம்
மோனமுறு நந் திபராய னனுரைத்த மொழிபோல்
மோசம்போ காதிருக்க வேண்டு மன்ருே
ஊனமுறு நெஞ்சமதிற் பதிய வில்லை
உய்வனே சோமசுந்த ரனுமெங் குருவே, 7

துறவுபெற்ற நற்றவர்கள் தினங்க டோறும்
துணிவொடுநல் ஞானசாத்தி ரங்கள் கேட்டல்
மறவியுற்றும் விடாதியற்றி னதன்ப லத்தால்
மாறுதலில் லகம்பிரமம் ஆம்வி ருத்தி
பெறவுமிங் கதுகொண்டா வரண மொழிப்பார்
பெற்றவிதல் லாதவரைப் பேச லாமோ
துறவரென் றெனக்கோதி யொடுக்கம் பெற்றீர்!
தூயவனே சோமசுந்த ரனுமெங் குருவே. 8

கானலுக்கு நீர்காட்டுஞ் சத்தி யுண்டின்
கனபிரமச் சத்தியுமிவ் வுலகைக் காட்டும்
கானலின்நீர் கானலேபோல் பிரமச் சத்தி
கனபிரம மேயன்றிப் பிரிவு மாமோ
ஊனமிலாப் பிரமம்நீ யேயிச் சொல்லை
உத்திவேத வனுபவமாக் கொள்வாய் யுள்ளம்
மானமிது வென்றுரைத்தீர் கோவி லூர்வாழ்
மாண்புமிகு சோமசுந்த ரனுமெங் குருவே- 9

எல்லவரும் வணங்குரியோன் ஞானியென்றே
எழிற்சுருதி முன்சாத்தி ரங்க ளோதின்
நல்லமுமுட் சுகளுக்கு முத்திப் பேறும்
நலம்நாடு மற்றவர்க்கு அறம்முன் மூன்றும்
இல்லென்னு தளித்தற்கோ சமாதி யாகி
இலங்குறுவீர் கோவிலூர் மடத்தி லந்தோ
நெல்லைநா யகியருள்செய் கோவி லூரில்
நீடுவாழி சோமசுந்த ரனுமெங் குருவே. 10

அகம்பிரம் மாஸ்மி

உ
சிவமயம்

# காரைக்குடி ஸ்ரீ நா. க. லெ. இராமசாமி செட்டியார் அவர்களால் பாடப்பெற்றது.

### ஸ்ரீ கணபதி வணக்கம்

குஞ்சர வதனமென் குமரனின் மூத்தோய்
தஞ்சமென் றடியனைத் தாங்கும் தயாநிதி
அஞ்சலென் றென்னை நீ அன்புடன் காத்திடுங்
கஞ்சமா மலர்ப்பதம் கணபதி தருகவே.

### ஸ்ரீ சண்முக வணக்கம்

கருணையா லிந்தக் கடலுல கனைத்துங்
காத்திடுங் கரியமால் மருகோய்
வருமையால் வாடி நைந்துநைந் துருகும்
மனத்தினேற் கருளு நாளுளதோ
அருமறை முதல்வா அத்தனர் புதல்வா
அபயமென் றறற்றிடு மென்முன்
திருவுருக் காட்டி இருகர மீயுந்
திருப்பேரையூர் வாழ்ந்திடுங் குகனே.

## ஸ்ரீ குருஸ்துதி

திருவாக்கில் வாசிட்டம் தினம்சொல்லுந் தேசிகனே
உருவாக்கு உன்னடியார் உறுதியுடன் போற்றிசெயத்
திருவாகச் சிற்றுண்டித் தினந்தினமு வழங்கிடுவீர்
உருநாமம் ஒன்றுமில்லா உயர்சிவமாய் விளங்குகிறீர்.

வாயெலாஞ் சிவநாமம் வடிவெலாஞ் சிவரூபம்
காயமெலாந் திருநீறு கருத்தெலாஞ் சிவசிந்தை
தேயமெலாஞ் சிவலோகந் தேசிகனே நின்பதந்தோய்
நேயசொலாஞ் சோமசுந்தர நின்றுணையடிந் போற்றுவனே.

# ஸ்ரீலஸ்ரீ சோம சுந்தர ஞான தேசிக சுவாமிகள் மீது
## காரைக்குடி ஆற்காட்டார் வீடு
## கு. மெய்யப்ப செட்டியார் பாடியது

*ஆசிரிய விருத்தம்*

கற்பகத் தருவோ காமதேன் பசுவோ
கண்ணி னுண்மணி கொலோ கருணை
உற்றவா வுனையே நம்பினேர்க் குவந்தாய்
உய்யுமா றருள் புரிந் துதவும்
நற்றவர் சோம சுந்தர ஞானி
நா நிலத் தவர்குரு பீடம்
பெற்றமர் சோலைச் சமிவனத் திலகும்
பேரருள் மாமணி விளக்கே.

பூவுதிர்த் துனையே போற்றுமெய் யடியார்
போற்றலுக் கிரங்குநீ எனது
பாவினத் துக்கும் பரிந்தருள் குவையோ
பண்பிலே லெனினு நா னுனையே
நாவுளம் ஒருங்கெந் நாளுமே துதித்தேன்
நலமளித் தருள்தர வேண்டிச்
சேவித்தேன் சோம சுந்தர ஞானி
சீர்பதஞ் சிரத்தினில் வைப்பாம்.

தொண்டர் தொண்டன் "துறவு"கொள் சாமியைப்
பண்டு பாடினேன் பரவினேன் நீஎனக்(கு)
உண்டு ஞானமென் றுவந்துநல் லாசியை
விண்ட ளித்ததை விளம்பிடற் பாலதோ.

